Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு

வடிவம்

நாட்டு மக்களே உங்கள் உள்ளத்தில் தோன்றும் எண்ணங்களுக்கு உருவமாக, லட்சியங்களுக்கு வடிவமாக நாங்கள் இருக்கிறோம்.



-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

அறிவு

பாரதிதாசன் அவர்களது பாடல்களை வகுப்புக்கு தகுந்தபடி தொகுத்துப் பாடமாக வையுங்கள். ஐந்தாண்டு அறிவு ஓராண்டில் தோன்றி விடும்.

-தந்தை பெரியார்

மலர்:7 சென்னை 13-3-83 ஞாயிறு வெளியீடு 14-3-83 திங்கள் இதழ்: 144

## உள்ளாட்சி தேர்தல் நடத்துவது பற்றிய அனைத்துக் கட்சி ஆலோசனை கூட்டம்:

# தி. மு. க. ஓட்டம்

## 'நொண்டிச் சாக்கு' கூறி வெளிநடப்பு

சென்னை, மார்ச் 13- உள்ளாட்சித் தேர்தல் நடத்துவது பற்றி ஆலோசிக்க கூட்டப்பட்ட அனைத்துக் கட்சிக் கூட்டத்தை பிரதான எதிர்க் கட்சியான தி.மு.க. புறக்கணித்தது.

கூட்டம் ஆரம்பித்தவுடன், 'இந்தக் கூட்டத்துக்கு முதலமைச்சர் வரவில்லை' என்று நொண்டிச்சாக்கு கூறி தி. மு. க. பிரதிநிதி வெளியே போய் விட்டார்.

ஊராட்சி நகராட்சித் தேர்தல்களை நடத்துவது குறித்து அனைத்துக் கட்சித் தலைவர்களின் கூட்டம் உள்ளாட்சித் துறை அமைச்சர் தலைமையில் அரசு தலைமைச் செயலகத்தில் 13-ந் தேதி காலை நடைபெறும் என்று அரசு தரப்பில் ஏற்கெனவே அறிவிக்கப்பட்டிருந்தது அல்லவா?

அதன்படி தலைமைச் செயலகத்தில் இக்கூட்டம் இன்று நடைபெற்றது. உள்ளாட்சித் துறை அமைச்சர் குழந்தைவேலு தலைமை வகித்தார்.

இக்கூட்டத்தில் 27 கட்சிகளின் தலைவர்கள் கலந்துகொண்டனர்

சட்டத்துறை அமைச்சர் பொன்னையனும் இக்கூட்டத்தில் கலந்து கொண்டார்.

பங்கேற்ற கட்சித் தலைவர்கள் வருமாறு:-

துரை. கோவிந்தராசன் [கழகம்] சங்கரலிங்கம் (தி.மு.க. நவநீதகிருஷ்ண பாண்டியன் (கா. கா. தே.கா.) தி.சு.கிள்ளிவளவன் (தமிழ் நாடு காமராஜ் காங்கிரஸ்)

ஹாஜா ஷெரீப், டி. யசோதா (இ. காங்கிரஸ்.)

அனந்தநாயகி காங்கிரஸ் எஸ்

ஜெய்லானி [காங்கிரஸ் ஜே]

ப. மாணிக்கம் (கம்யூ) நல்லசிவம் (மார்க்சிஸ்ட்) கே. நாராயண ராவ் (பா.ஜ.க.) ஆறுமுகசாமி (ஜனதா) டாக்டர் சந்தோஷம் (லோக்தளம்), எஸ். எல். கிருஷ்ணமூர்த்தி (ஜனநாயக சோஷலிச கட்சி) அய்யண அம்பலம் (முத்துராமலிங்க தேவர்பார்வர்டு பிளாக்) வை.பாலசுந்தரம் அம்பேத்கார் மக்கள் இயக்கம், செங்கம்ஜப்பார் (முற்போக்கு முஸ்லிம்லீக்) சி.கே. டேனியல் (கிறிஸ்தவ ஜனநாயக கட்சி) வசீகரன் (அகில இந்திய கிறிஸ்தவகட்சி) வானூர் கனகராஜ் (இந்திய குடியரசு கட்சி—கவாய்) மார்க்கபந்து (உழைப்பாளர் கட்சி), இரா. குலசேகரன் (தமிழ்நாடு விவசாயத் தொழிலாளர் கட்சி) பிரான்சிஸ்ராயன் (கிறிஸ்தவ ஜனநாயக கட்சி) செய்குத்தம்பி (தமிழ் நாடு முஸ்லிம்லீக்)

வேணுகோபால் (இந்திய விவசாய தொழிலாளர் கட்சி) மியாகான் (இந்தியயூனியன் முஸ்லிம் லீக்) திருவாரூர் தங்கராசு (திராவிடர் கழகம்) எம். நடராசன் (அனைத்திந்திய பார்வர்டுபிளாக்)

கூட்டம் தொடங்கிய பின், தி. மு. க. தலைவர் சங்கரலிங்கம் பேசும்போது இக்கூட்டத்தில் முதல்வர் கலந்து கொள்ளாததால் வெளிநடப்புச் செய்வதாகச் சொல்லி விட்டு வெளிநடப்புச் செய்தார்.

இதற்கு உள்ளாட்சித் துறை அமைச்சர் குழந்தைவேலு பதிலளித்துப் பேசுகையில் கூறியதாவது:—

உள்ளாட்சித் தேர்தல்கள் நடத்துவது குறித்து அனைத்துக்கட்சித்தலைவர்கள் கூட்டம் உள்ளாட்சித் துறை அமைச்சர் தலைமையில் நடைபெறும் என்றுதான் அறிவிக்கப்பட்டது. அந்தஅறிவிப்பின்படிதான்

(8-ம் பத்தி பார்க்க)

(5-ம் பத்தி தொடர்ச்சி)

இங்கே கூட்டம் நடக்கிறது.

ஆனால் தி.மு.க. தலைவர் சங்கரலிங்கம் வெளிநடப்புச் செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன், வேண்டும் என்றே வெளி நடப்புச் செய்திருக்கிறார்.

முதல்வர் கலந்துகொள்வார் என்று அறிவிக்கப்படவே இல்லை.

தேர்தலை நடத்த வேண்டும் என்ற அக்கறையுடன் அரசு இந்தக் கூட்டத்தை கூட்டி இருக்கிறது. ஆனால் இதில் கலந்து கொண்டு தி. மு. க. தலைவர் வெளிநடப்புச் செய்திருப்பது தேர்தலை நடத்துவதில் அவர்களுக்கு அக்கறை உள்ளதா என்ற ஐயப்பாட்டை கிளப்புகிறது.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.

திருவாரூர் தங்கராசு (திராவிடர் கழகம்) பேசுகையில் "உள்ளாட்சித் தேர்தலை நடத்த வேண்டும் என்ற நல்ல நோக்கத்தில் அரசு இந்த அனைத்துக் கட்சித்தலைவர்கள் கூட்டத்தைக் கூட்டியுள்ளது. வேண்டுமென்றே திமுக இக்கூட்டத்திலிருந்து வெளிநடப்பு செய்திருப்பதுகண்டிக்கத்தக்கது" என்று கூறினார்.

## பின் தங்கியோர் நல கமிஷனுக்கு மேலும் ஒரு உறுப்பினர்

சென்னை, மார்ச், 13- பின்தங்கியோர்நல 2வது கமிஷன் உறுப்பினராக கழக எம்.எல்.ஏ. டி.ராமசாமி நியமிக்கப்பட்டுள்ளார். அம்பாசங்கர் இக்கமிஷனின் தலைவராக உள்ளார்.

### விழுப்புரம் வரை மின்சார ரெயில்:

## மத்திய அரசு மறுப்பு

சென்னை, மார்ச் 13— சென்னையிலிருந்து விழுப்புரம் வரை மின்சார ரெயில் விடவேண்டும் என்ற தமிழக அரசின் கோரிக்கையை மத்திய அரசு ஏற்க மறுத்து விட்டது.

மின்சார ரயிலில் கழிப்பிட வசதியில்லாததால் செங்கல்பட்டுக்குஅப்பால் மின்சார ரெயில் விடுவதற்கு வாய்ப்பில்லை என்று மத்திய அரசு தெரிவித்திருக்கிறது.

என்றாலும் சென்னையிலிருந்து விழுப்புரம் வரை மின்சார ரெயில் விட வேண்டும் என்ற கோரிக்கையைத் தொடர்ந்து தமிழக அரசு வலியுறுத்தும்என்று சட்டமன்றத்தில் போக்குவரத்துத் துறைஅமைச்சர் முத்துசாமி கூறினார்.

## 397 கொத்தடிமைகள் புரட்சித்தலைவர் முயற்சியால் விடுதலை

சென்னை, மார்ச் 13. ஆந்திர மாநிலத்தில் கொத்தடிமைகளாகக் கல் உடைக்கும் தொழிலில் ஈடுபட்டிருந்த 397 தமிழர்கள் முதல்வர் புரட்சித்தலைவரின் முயற்சியால் 'விடுதலை' பெற்றனர். இவர்களில் பலர் சிறுவர்களாகும்.

தமிழகத்தின் பல்வேறு மாவட்டங்களைச் சேர்ந்த ஏழை எளிய மக்களை சிலர் அணுகினர். ஆந்திர மாநிலம் ஹைதராபாத் அருகே நல்ல வேலையும், கை நிறையச் சம்பளமும் கிடைக்கும் என்று ஆசை வார்த்தை சொன்னார்கள். இதனை நம்பி 397 பேர் ஹைதராபாத்திற்கு சென்றார்கள்.

அப்படிச் சென்றவர்கள் மலைப்பகுதிகளில் கல் உடைக்கும் தொழிலில் ஈடுபடுத்தப்பட்டனர். சம்பளமோ குறைவு பல நாட்களாக அரைபட்டினி வாழ்க்கை நடத்தினார்கள்.

அவர்கள் ஊர் திரும்புவதற்கோ பணம் இல்லை. அப்படி அவர்கள் ஊர் திரும்ப விரும்பினாலும் தப்பித்து வர வழியில்லை அந்த அளவுக்கு அவர்களுக்குக் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டிருந்தன.

கல் உடைக்கும்மலை அடிவாரங்களில் குடிசைகளில் கடும் குளிரிலும் கொடும் வெயிலிலும் அவர்கள் அவல வாழ்க்கை வாழ்ந்து வந்தார்கள்.

### முதல்வரின் உடனடி நடவடிக்கை

இவர்களுடைய பரிதாப நிலையை அறிந்த சேலம் மாவட்டத்துக்காரர் ஒருவர் முதல்வர் புரட்சித் தலைவர் அவர்களுக்குக் கடிதம் எழுதினார். அந்தக் கடிதத்தைப் பார்த்த புரட்சித்தலைவர் உடனடியாக நடவடிக்கை மேற்கொண்டார்.

ஹைதராபாத் மலைக் காடுகளில் கொத்தடிமைகளாக அவதிப்படும்

(4-ம் பக்கம் பார்க்க)

### தமிழகத்துக்கு அரிசி தரும்படி மத்திய அரசை வற்புறுத்தி

# சென்னையில் நடந்த பிரம்மாண்டமான சைக்கிள் பேரணி

சென்னை, மார்ச். 13. தமிழகத்துக்கு அரிசி தரும்படி மத்திய அரசை வற்புறுத்தி கழகத் தோழர்களும், மன்ற மறவர்களும் பிரமாண்டமான சைக்கிள் பேரணி ஒன்றை நேற்று சென்னையில் நடத்தினார்கள்.

சென்னை மாவட்ட எம். ஜி. ஆர். மன்றச் செயலாளர் இ. மதுசூதனன் தலைமையில் நடந்த இந்த ஊர்வலத்தில் 5 ஆயிரத்துக்கும் மேற்பட்டவர்கள் பங்கேற்றனர்.

இந்த சைக்கிள் பேரணி நேற்று பிற்பகல் 3 மணிக்கு தங்கசாலை மணிக்கூண்டு அருகே இருந்து புறப்பட்டது. வால்டாக்ஸ் சாலை, சென்டிரல், அண்ணா சாலை வழியாக சைதாப்பேட்டை ஆசிரியர் கல்லூரி எதிரே உள்ள அண்ணா சிலை அருகே முடிவடைந்தது.

பேரணியில் வந்தவர்கள் 'மத்திய அரசே அரிசி கொடு' 'அண்ணா நாமம் வாழ்க' புரட்சிதலைவர் வாழ்க என்று முழக்கமிட்டவாறு வந்தனர். அண்ணா சாலையில் உள்ள அண்ணா சிலை அருகே ஊர்வலம் வந்த போது இ. மதுசூதனன் அண்ணா சிலைக்கு மாலை அணிவித்தார்.

பேரணி முடிவடைந்த சைதாப்பேட்டை அண்ணா சிலை அருகே மேடை அமைக்கப்பட்டிருந்தது. அங்கே இருந்த அண்ணா சிலைக்கும் மதுசூதனன் மாலை அணிவித்தார்.

பேரணியை முடித்து வைத்துப் பேசுகையில் கோ-ஆப்டெக்ஸ் ஆலோசனைக் குழுத்தலைவர் அனகாபுத்தூர் ராமலிங்கம் கூறியதாவது:—

இன்றையதினம் இங்கே மாபெரும் சைக்கிள் பேரணி நடந்து முடிந்துள்ளது. இதுதான் புரட்சித்தலைவரின் படை.

இப்படை தோற்கின் எப்படை வெல்லும்என்று பேரறிஞர் அண்ணா சொல்வார்.

### அண்ணா வழியில்...

தமிழக மக்களுக்காக அவர் எந்த வகையில் பாடுபட்டாரோ அந்தக் கருத்துக்களை உள்ளத்தில் கொண்டு முதல்வர் புரட்சித்தலைவர் செயல்பட்டு வருகிறார்.

போதிய மழை பெய்யாததால் விளைச்சல் இல்லை. வறட்சி நிலை உள்ளது. இந்த நிலையை பயன்படுத்திக் கொண்டு தேசிய கட்சி என்றும் தேசிய நீரோட்டம் என்றும் பேசும் ஒரு கட்சி மக்களை திசை திருப்பப்பார்க்கிறது.

அரிசி இல்லை, மண்ணெண்ணெய் இல்லை என்பதற்கு யார் காரணம்? தமிழக மக்களுக்கு தேவையான அரிசியை கொடுங்கள் என்று முதல்வர் புரட்சித தலைவர் கேட்டால் யானைப் பசிக்கு சோளப் பொரியைத் தருவது போல 5 ஆயிரம் டன் அரிசி தருகிறார்கள்.

முதல்வர் முயற்சியால் இந்த அரிசி பெற்றதாக அவர்கள் சொல்லவில்லை. காங்கிரஸ் கட்சியின் நியமனத் தலைவர் மரகதம் சந்திர

(4-ம் பக்கம் பார்க்க

### கொத்தடிமைகளுக்கு மறுவாழ்வு அளிப்பதில்

# தமிழகம் முதலிடம்

## புரட்சித்தலைவர் அரசுக்கு மத்திய திட்டக்குழு பாராட்டு

புதுடெல்லி, மார்ச். 13- கொத்தடிமைகளுக்கு மறுவாழ்வு அளிப்பதில் தமிழ் நாடு அரசு முழு அளவில் வெற்றி கண்டுள்ளது என்று மத்திய திட்டக் கமிஷன் பாராட்டுத் தெரிவித்துள்ளது.

இருபது அம்சத்திட்டத்தின் கீழ், கொத்தடிமைகளை மீட்டு மறுவாழ்வு அளிப்பது மரம் நடுவது, சுகாதார நிலையங்கள் அமைப்பது, குழந்தைகள் நலத் திட்டங்களை செயல்படுத்துவது ஆகிய திட்டங்கள் எந்த அளவுக்கு நாட்டில் நிறைவேற்றப்பட்டுள்ளன என்று மத்திய திட்டக்கமிஷன் ஆய்வு நடத்தியது.

மரம் நடுதல், குழந்தைகள் நலம் பேணுதல் ஆகிய திட்டங்கள் முழு அளவில் நிறைவேற்றப்பட்டு குறியீட்டு அளவை எட்டி விட்டன என்று திட்டக்கமிஷன் கருத்து தெரிவித்தது.

### தமிழக அரசு சாதனை

கொத்தடிமைகளை விடுவித்து மறுவாழ்வு அளிக்கும் திட்டத்தின் கீழ் 35828 குடும்பங்களை மீட்டு மறுவாழ்வு அளிக்ககுறியீடு நிர்ணயிக்கப்பட்டது அதில் ஜனவரி மாதம் வரை 31928 குடும்பங்கள் கொத்தடிமை நிலையிலிருந்து மீட்கப்பட்டு மறுவாழ்வு அளிக்கப்பட்டுள்ளன. இது 89சதவீதசாதனையாகும்.

தமிழ் நாடு அரசு தனது குறியீட்டு அளவை நிறைவேற்றி சாதனைகள் புரிந்துள்ளது இதேபோல் ஒரிசாவும குறியீட்டு அளவை எட்டியுள்ளது ஆனால் ஆந்திரா கேரளம், மத்தியப்பிரதேசம் ஆகிய மாநிலங்கள் இன்னும் குறியீட்டு அளவை எட்டவில்லை என்று மத்திய திட்டக் குழு அறிவித்துள்ளது

இருபது அம்சத் திட்டத்தை தீவிரமாகசெயல்படுத்தி குறியீட்டு அளவுகளை இந்த ஆண்டு இறுதிக்குள் நிறைவேற்றி விடுமாறு மாநில அரசுகளை மத்திய திட்ட அமைச்சர் எஸ். பி. சவான் கேட்டுக் கொண்டுள்ளார்.

## கள்குடித்த இருவர் சாவு; 28பேர் கவலைக்கிடம்:

## டாக்டர்குழுவை அனுப்பினார் புரட்சித்தலைவர்

சென்னை, மார்ச் 13— சென்னையை அடுத்த குரோம்பேட்டை லட்சுமிபுரத்தில் கள் குடித்த 30 பேர் அபாயகரமான நிலைமையில் தாம்பரம் தலைமை மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டனர், அவர்களில் இருவர் மரணமடைந்தனர்28பேர் நிலைமை கவலைக்கிடமாக இருக்கிறது.

இவர்கள் லட்சுமிபுரம் மலை அடிவாரத்திற்குப் போய் கள் குடித்தார்களாம். போதை அதிகமாக இருக்க வேண்டும் என்பதற்காக இந்தக் கள்ளில் ஏதோ கலந்து இருக்கிறார்கள் என்று சந்தேகம் ஏற்பட்டிருக்கிறது.

உத்திரமேரூர் சட்டமன்ற உறுப்பினர் ஜெகத் ரட்சகன் இந்தச் சம்பவம் பற்றி முதல்வர் புரட்சித் தலைவருக்குத் தெரிவித்தார். அதனைத் தொடர்ந்து சென்னையிலிருந்து டாக்டர்கள் குழு ஒன்றினை முதல்வர் புரட்சித் தலைவர் அனுப்பி வைத்தார். மாவட்ட பெரிய போலீஸ் அதிகாரிகளும் குரோம்பேட்டைக்கு விரைந்து சென்றனர்.

போதை மிகுந்த கள் குடித்த 30 பேர்களில் ஏழுமலை (வயது38) பலராமன் (வயது 40) ஆகிய இருவரும் மரணமடைந்தனர்.

மற்றவர்களுக்குதாம்பரம் தலைமை மருத்துவமனையில் தீவிர சிகிச்சை அளிக்கப்பட்டு வருகிறது. சட்டமன்ற உறுப்பினர் ஜெகத் ரட்சகன்மருத்துவமனையிலேயே இருந்து பாதிக்கப்பட்டவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்து வருகிறார்.

## எண்ணை விலை குறையும்

ஆனலுலு, மார்ச் 13— உலகசந்தையில் குருட் எண்ணை விலை அடுத்த 6மாதங்களில் பெருமளவு குறைய இருக்கிறது ஒரு பீப்பாய் குருட் எண்ணை விலை 22 டாலர் (சுமார் ரு 220.) அளவுக்குக் குறையும் என்று ஈரான் நிபுணர் பஷராகி தெரிவித்துள்ளார்.

கருணாநிதி அரசைப் போல்

# அதிகப்பற்று வைக்காமல் நிதிநிலையைசமாளிக்கும் புரட்சித்தலைவர் அரசு

## ஆர். டி. சீதாபதி பாராட்டு

**சென்னை, மார்ச் 13- கருணாநிதி ஆட்சி காலத்தில் ரிசர்வ் வங்கியிடம் அதிகப்பற்று வைக்கப்பட்டது. ஆனால் இப்போது அதிகப்பற்று வைக்காமலே தமிழக நிதிநிலைமையை சமாளித்து வருகிறது புரட்சித்தலைவர் அரசு என்று மேலவையில் ஆர்.டி. சீதாபதி கூறினார்.**

சட்ட மேலவையில் நிதிநிலை அறிக்கை விவாதத்தில் கலந்துகொண்டு கழக உறுப்பினர் ஆர். டி சீதாபதி பேசினார்.

அவர் பேசியதாவது:—

அண்மையில் டெல்லியில் நடைபெற்ற நடுநிலை நாடுகள் மாநாட்டுக்கு தலைமைப் பதவிப் பொறுப்பை ஏற்றுப் பேசிய பிரதமர் இந்திரா காந்திக்கு நான் பாராட்டுத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அறிஞர் அண்ணா ஏற்கனவே சொல்லி இருக்கிறார்,

மாநிலத்தில் வரிகளைக் குறைத்து வசதிகளைப் பெருக்குவோம் என்று சொல்லி இருக்கிறார்,

### அண்ணா வழியில் புரட்சித்தலைவர்

அந்த எண்ணத்தை அடிப்படையாகக் கொண்டுதான் புரட்சித் தலைவர் அரசு ஆட்சி நடத்தி வருகிறது.

மண்எண்ணெய் விளக்குகளுக்கும், அதன் திரிகளுக்கும் இந்த அரசு வரி விலக்கு அளித்துள்ளது. அதற்கு எனது பாராட்டுக்கள்,

மண்எண்ணெய் விளக்குகள் எங்கே இருக்கின்றன என்று இந்திரா காங்கிரஸ் உறுப்பினர் திண்டிவனம் ராமமூர்த்தி கேட்டார்.

அவர் உயர்ந்த இடத்தில் இருக்கிறார். குடிசை வாழ் மக்களைப் பற்றி அவருக்குத் தெரியாது. சென்னை நகரில் எத்தனையோ குடிசைகள் இருக்கின்றன. அவர்கள் வறுமையில் வாடிக் கொண்டு இருக்கிறார்கள்

அவர்கள் வீடுகளில் எல்லாம் மண்எண்ணெய் விளக்குகள் எரிகின்றன. அப்பேர்பட்ட ஏழைக் குடிசைவாசிகள் பயன் பெறும் வகையில் தான் மண்எண்ணெய் விளக்குகளுக்கும், திரிக்கும் வரிவிலக்கு அளிக்கப்பட்டுள்ளது.

பட்டுத் தொழிலுக்கும் வரிவிலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது.

இதனாலும் ஆயிரக் கணக்கான பட்டுத் தொழிலாளர்கள் பயன் அடைகிறார்கள். அதனால் பட்டுத்தொழில் மேலும் முன்னேற்றம் அடையும். அதற்கு எனது பாராட்டுக்கள்.

சேலத்தில் ஆயிரக் கணக்கானவர்கள் வெள்ளி ஆபரணம் கொலுசு செய்வதில் ஈடுபட்டுள்ளனர்.

அந்தத் தொழிலுக்கும் வரி விலக்கு அளிக்கப்பட்டுள்ளதால் அங்கேயும் ஏராளமான தொழிலாளர்களும் பயன் பெறும் நிலை ஏற்பட்டு இருக்கிறது.

குடிசை வாழ்மக்கள் அதிகம் பயன்படுத்தும் சோப்புக்கட்டிகளுக்கும் வரிவிலக்கு அளிக்கப்பட்டு இருக்கிறது.

அதிக சோப் உற்பத்தி செய்யும் அளவில்கிராமத் தொழிலுக்கு இந்த அரசு வரிவிலக்கு அளித்ததால் அந்தத் தொழில் மேலும் முன்னேற இருக்கிறது.

மாட்டுத் தீவனங்களுக்கும் வரிவிலக்கு தரப்பட்டுள்ளது

மாடுகள் வாங்கிஜீவனம் செய்யும் ஏராளமானவர் இதனால் பயன்பெறுவார்கள்.

ஆகவே காந்திஜியின் வழியில் கிராமமக்களுக்கு புரட்சித்தலைவர் நன்மைகளைச் செய்து வருகிறார்.

சேலத்தில் சவ்வரிசி செய்யும் தொழிலுக்கும் வரிவிலக்கு அளிக்கப்பட்டு இருக்கிறது.

திண்டிவனம் ராமமூர்த்தி:— சேலத்தில் இப்போது மட்டுமல்ல பல ஆண்டு காலமாக அந்தத் தொழில் நடக்கிறது. இதில் ஒன்றும் புதுமையில்லை,

அமைச்சர் கே.ஏ.கே:- சேலத்தைப் பொறுத்த மட்டில் 40 ஆண்டுக்காலமாக சுமார் ஒரு லட்சத்திற்கும் மேற்பட்ட விவசாயிகள் சவ்வரிசி பயிர் உற்பத்தி தொழிலில் ஈடுபட்டு இருக்கிறார்கள்.

### ஏகாதிபத்தியம் ஒழிப்பு

தமிழக அரசு வரி விலக்கு அளித்தன் மூலம 400 சிறு தொழில் அதிபர்களுக்கு வாழ்வு அளிக்கப்பட்டுள்ளது.

நாலைந்து வியாபாரிகள் அங்கு ஆதிக்கம் செலுத்தி ஆண்டுதோறும் ரூ. 400 கோடி லாபம் பெற்று வந்தார்கள். இப்போது அது ஒழிக்கப்பட்டு சிறு தொழில் அதிபர்களும் தொழிலாளர்களும் சுமார் லட்சத்திற்கு மேற்பட்டவர்களுக்கு பாதுகாப்பு அளிக்கப்பட்டுள்ளது

மூட்டை ரூ 75 ஆக இருந்த சவ்வரிசி இப்போது ரூ 450 ஆக உயர்ந்திருக்கிறது

தொழிற் கூட்டுறவு சங்கங்களுக்கு வரி விலக்கு அளிக்கப்பட்டுள்ளதால் தொழிலாளர்களுக்கு இதனால் பலன் ஏற்பட்டு இருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆர்.டி. சீதாபதி:— ஒரு குடும்பத்தில் ஒருவருக்கு வேலை என்ற சீரிய திட்டத்திற்கு ரூ 15 கோடியை இந்த அரசு ஒதுக்கி இருக்கிறது

தமிழகத்தில் தொழில் துறையில் இந்த அரசின் அணுகுமுறை சரியில்லை என்றெல்லாம் உறுப்பினர் ஏ. ஆர். தாமோதரன் பேசினார்.

நான் இங்கே சில ஆதாரங்களைத் தெரிவிக்க விரும்புகிறேன்

1981-82ல் 92 உரிமங்களுக்காக வாதாடி கோரிக்கை விடுத்தோம்.

ஆனால் மத்திய அரசு 39 பேர்களுக்குத்தான் உரிமம் வழங்கி இருக்கிறது.

### மாற்றாந்தாய் மனப்பான்மை

அதே ஆண்டில் 188 பேர்களுக்கு தொழில் துவங்க அறுபது கோடி மத்திய அரசிடம் கேட்போம்

ஆனால் 37 பேருக்குத்தான் உரிமம் தந்தது. இப்படி மாநில அரசை மத்திய அரசு புறக்கணித்துக்கொண்டே வருகிறது இதை உறுப்பினர் உணரவேண்டும்.

மாநில அரசுக்கு மாறுபாடான நடவடிக்கைகளை மத்திய அரசு மாற்றிக் கொள்ளவேண்டும்

மாற்றாந்தாய் மனப்பான்மையுடன் மத்திய அரசு தமிழக அரசை நடத்தக்கூடாது

சுற்றுலா தொழில் துறை மற்றும் மின் உற்பத்திக்கு மத்திய அரசு அதிக நிதியைத் தரவேண்டும்.

1974-75ல் இதேமாமன்றத்தில் என்னுடைய முன்னாள் அண்ணன் கலைஞர் கருணாநிதி பேசும் போதும் மத்திய அரசு நிதி நிலை அறிக்கையில் தமிழகத் தேவைகளைக் குறைத்து மதிப்பிடுகிறது' என்று அப்போதே சொன்னார்.

இப்போதும் நமது தேவைகளை குறைத்து மதிப்பிடுகிறது புறக்கணிக்கிறது என்று முதல்வர் புரட்சித் தலைவர் சொல்கிறார்.

மின்சாரத் துறைக்கு முந்திய அரசு எவ்வளவு பணம் செலவழித்தது. இப்போது புரட்சித் தலைவர் அரசு எவ்வளவு அதிகமாக தொகை ஒதுக்கி செலவு செய்கிறது என்றெல்லாம் நம் உறுப்பினர் கண்ணப்பன் கொடிட்டுக் காட்டினார்,

இந்த அரசு ரிசர்வ் வங்கியிடம் இருந்து அதிகப்பற்றும் பெறவில்லை என்று ரிசர்வ் வங்கி கவர்னர் பாராட்டு தெரிவித்து இருக்கிறார்.

1972—73ல் கருணாநிதி நாங்கள் அதிகப் பற்று வாங்கியிருக்கிறோம என்று கூறியிருக்கிறார்.

இந்த அரசு அதிக பற்று பெறாமலே ரிசர்வ் வங்கியின் பாராட்டைப் பெற்றிருக்கிறது. இது நல்ல எடுத்துக்காட்டாகும்.

கங்கை, காவிரி இணைப்பை மத்தியஅரசு விரைவில் செயல்படுத்த வேண்டும். அப்போது தான் தொழில் மின் சாரத்துறை முன்னேறும்.

இவ்வாறு ஆர். டி. சீதாபதி கூறினார்.

---

### வரி விளம்பரம்



### ஹஜ் 1983

தமிழ்நாடு மற்றும் புதுச்சேரி மாநிலங்களைச் சேர்ந்த ஹஜ் பயணிகள் தங்களின் மனுக்களை அனுப்பவில்லையெனில் விரைவில் அடியிற்கண்ட முகவரிக்கு 31-3-1983க்குள் அனுப்பும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

ஹஜ் குலுக்கல்:
10—4—83 காலை
10.00 மணி
சென்னை
ராஜாஜி மண்டபம்

விவரங்களுக்கு:
செயலாளர்,
தமிழ்நாடு ஹஜ்குழு,
தபால்பெட்டி
எண் 841,
சென்னை 600 009

---

### பள்ளிக்கூடத்தில் திருடிய சேவியர் கைது

சென்னை, மார்ச் 13- ஆவடியைச் சேர்ந்தவர் சேவியர். (வயது 25) இவர் அந்தப் பகுதியில் உள்ள 2 பள்ளிக் கூடங்களில் இரவு நேரத்தில் கடிகாரம், எடைபார்க்கும் கருவி போன்ற பல பொருட்களைத் திருடினாராம். இவற்றின் மதிப்பு ஆயிரம் ரூபாய்க்கு மேல் இருக்குமாம்.

இது குறித்து அந்தப் பள்ளிக்கூட நிர்வாகிகள் போலீசில் புகார் செய்தனர் ஆவடி இன்ஸ்பெக்டர் செல்வின் பள்ளிக் கூடத்தில் திருடிய சேவியரைக்கைதுசெய்து வழக்கு தொடர்ந்துள்ளார்.

---

பரோலில் வந்து தலைமறைவாகிய

### பலே கில்லாடி மீண்டும் கைது

சென்னை, மார்ச் 13— வியாசர்பாடியைச் சேர்ந்தவன் மூர்த்தி என்கிற சத்திய மூர்த்தி (வயது 29) இவன் ஒரு கொலைவழக்கு சம்பந்தமாக ஆயுள் தண்டனை பெற்று திருச்சி சிறையில் இருந்து வந்தான்.

கடந்த ஜனவரி மாதம் 6 நாட்கள் பரோலில் சென்றானாம், பிறகுவரவே இல்லை. தலைமறைவு ஆகிவிட்டானாம். திருச்சி போலீசார் இதுகுறித்து விசாரணை செய்து வந்தனர்.

இதற்கிடையில் அபிராமபுரம் குற்றப் பிரிவு இன்ஸ்பெக்டர் பாலகிருஷ்ணன் இரவு ரோந்து வந்து கொண்டிருக்கும்போது மூர்த்தி சந்தேகமான முறையில் நடந்து கொண்டு சென்றதைக் கண்டார்.

பின்னர் அவனை விசாரித்தபோது மூர்த்தி திருச்சி சிறையிலிருந்து பரோலில்வந்தவன் என்றும் தலைமறைவாகி இருக்கிறான் என்ற விவரமும் தெரிந்தது

அபிராமபுரம் இன்ஸ்பெக்டர் பாலகிருஷ்ணன், மூர்த்தியைஉடனடியாகக் கைது செய்து காவலில் வைத்தார்.

இது சம்பந்தமாக திருச்சி சிறைக்கு தகவல் தெரிவிக்கப்பட்டுள்ளது.

---

கோட்டையில்

### 'லிப்ட்' அமைப்பதுஏன் தி. மு. க. புகாருக்கு நாவலர் பதில்

**சென்னை, மார்ச் 13- கோட்டையில் லிப்ட் அமைப்பது பற்றி புகார் கூறிய தி.மு.க. உறுப்பினருக்கு நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் சுடச்சுட பதிலளித்தார்.**

நிதிநிலை அறிக்கைமீது புருஷோத்தமன் [தி.மு.க] பேசுகையில் ''வறட்சி நிலை நீடிக்கும் வரை ஆடம்பர விழாக்களை அரசு நடத்தாது. ஒவ்வொரு காசும் வறட்சி நிவாரணத்துக்குப் பயன் படுத்தப்படும் என்றுமுதல்வர் கூறினார். ஆனால் தலைமைச் செயலகத்தில் ரூபாய் பல லட்சம் செலவிட்டு 'லிப்ட்' அமைக்கிறார்கள்'' என்று குறிப்பிட்டார்.

ஜே.சி.டி. பிரபாகரன் (குறுக்கிட்டு) பேசுகையில் கூறியதாவது:—

புரட்சித்தலைவர் கூறியதைத்திரித்துக் கூறவேண்டாம். அரசு விழாக்கள் பற்றித்தான் முதல்வர் கூறினார். அரசு சார்பில் நடக்க வேண்டிய அத்தியாவசியப் பணிகள் நடக்கக் கூடாது என்று புரட்சித்தலைவர் கூறவில்லை.

இவ்வாறு பிரபாகரன் கூறினார்

#### நாவலர் பதில்

நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் கூறியதாவது:—

கோட்டையில் 'லிப்ட்' அமைப்பது முதல்வர் புரட்சித்தலைவர் ஏறி இறங்குவதற்காக அல்ல. பல சமயங்களில் வெளிநாட்டுப் பிரதிநிதிகளும், வேறு பிரமுகர்களும் வரும் போது, வயதானவர்களால் மாடி ஏறிவர முடிவதில்லை. அப்படிப்பட்ட நிலைமையில் முக்கிய கூட்டங்கள் கூட மாடியில் அல்லாமல், கீழேயே நடக்கவேண்டிய நிலை ஏற்பட்டது.

உதாரணத்திற்குச் சொல்ல வேண்டுமானால் 1967-ல் நம்பூதிரிபாட் இங்கே வந்தார், அவரால் மாடி ஏறி வர முடியவில்லை. எனவே கீழேயே கூட்டம் நடந்தது. இப்படிப்பல நிகழ்ச்சிகள் உண்டு. அப்படிப்பட்டவர்களுக்கு வசதியாகத்தான் 'லிப்ட்' அமைக்கப்படுகிறதே தவிர முதல்வருக்காக அல்ல.

இவ்வாறு நிதி அமைச்சர் டாக்டர்நாவலர் கூறினார்,

---

அமைச்சர் முத்துசாமி பதில்:

### பஸ் வைத்திருக்கும் பினாமிகள் முதலாளி ஆக வழி இருக்கிறது

**சென்னை, மார்ச் 13- பஸ்களை வைத்திருக்கும் பினாமிகளே முதலாளிகளாக மாற வழி இருக்கிறது என்று அமைச்சர் முத்துசாமி கூறினார்.**

சட்டசபையில் கேள்வி நேரத்தின் போது பதிலளிக்கையில் அமைச்சர் முத்துசாமி கூறியதாவது:—

மோட்டார் வண்டிகள் சட்டம் 48 ஏ பிரிவின் கீழ் பேருந்து உரிமம் வழங்குவதற்கு முன் அல்லது புதுப்பிப்பதற்கு முன் விண்ணப்பதாரரின் மனு பினாமியாக உள்ளது என்று தெரிய வந்தால், அதனை நிராகரிப்பதற்கான அதிகாரம் மாவட்டப் போக்குவரத்து அதிகாரிக்கு வழங்கப்பட்டுள்ளது

#### அதிகாரம் உள்ளது

உரிமம் வழங்கிய பின் பினாமி எனத் தெரிய வந்தால் அந்த உரிமத்தை தற்காலிகமாக நீக்கவோ அல்லது நிரந்தரமாக நீக்கவோ சட்டப்பிரிவு 60ன் கீழ் உரிமம் வழங்கும் அதிகாரிகளுக்கு அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது. இதன் அடிப்படையில் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன.

ஒருவர் 5 பஸ்கள் வரை வைத்திருக்க அனுமதி வழங்கப்பட்டிருக்கிறது அதற்கு மேல் பினாமியாக வைத்திருப்பதுபற்றி அரசுக்கு புகார்கள் ஏதும் வரவில்லை பினாமியாக வைத்திருப்பது பற்றி புகார் வந்தால் பினாமியாக இருப்பவர்களை முதலாளிகளாக ஆக்க வழியிருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் முத்துசாமி கூறினார்.

---





Published by K. Ravindran on behalf of Thangamani publications and printed by him at All India Anna D. M. K. perarignar Anna trust press at 34, Nelson Manickam Road Madras—600 029.

Editor: E. PARASURAMAN

# தந்தையின் போக்கு: விஜயசாந்தி ஆவேசம்

கட்டியவனுடன் வாழ்வதைவிட வாழாவெட்டி என்ற பெயருடன் பிறந்த இல்லத்தில் இருப்பதே மேல் என்று எண்ணி வாழ்ந்த விஜயசாந்தியின் உள்ளத்தில் மாறுதல் ஏற்படுகிறது.

இனி வாழ்ந்தால் கணவனுடன் தான் வாழ்வது என்ற தீர்க்கமான முடிவுடன் வீட்டை விட்டு வெளியேறும் மகளை 'போகக் கூடாது' என்று தடுக்கிறார் அவள் தந்தை. இத்தனை நாள் உங்கள் பேச்சைக் கேட்டு வாழா வெட்டியாக வாழ்ந்த நான் இனி வாழ்ந்தால் என் கணவருடன்தான் வாழ்வேன் என்று தந்தையிடம் சவால் விட்டு கட்டியவனை நாடிச் செல்கிறாள்.

கணவனின் காலில் விழுந்து தன் தவறுக்கு மன்னிப்பு கோருகிறார். பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ. விழிகளில் பேசிய இரு உள்ளங்கள் தழுவலாலும் பேசத் துவங்கின.

இக்காட்சி சில்வி பிலிம்ஸ் கிளிப்பிள்ளை வண்ணப்படத்திற்காகப் படமாக்கப்பட்டது. கேசவ கணேஷ், விஜயசாந்தி, வி. கோபாலகிருஷ்ணன் பங்கேற்றனர்.

சங்கர் கணேஷ் இசையமைக்கும் இப்படத்தை கேசவகணேஷ் இயக்கி வருகிறார்.

சிவகுமார்-பூர்ணிமா
படம்: சஷ்டி விரதம்

ரஜினி-ஸ்ரீதேவி
படம்: அடுத்த வாரிசு,

# கண் சிவந்தால் மண் சிவக்கும்

உழைப்பவர்க்கும், உழைப்பை சுரண்டி உண்டு கொழுத்து வாழும் ஆதிக்க சக்திக்கும் இடையே ஏற்படும் போராட்டங்களை மையமாகக் கொண்டது இதன் கதை கரு. உழைக்கும் வர்க்கத்தை பணபலத்தால் வெல்லும் பண்ணையாரை ஒழிக்க புரட்சிப் பெண் பாப்பாத்தி பாத்திரம் இப்படத்தில் படைக்கப்பட்டுள்ளது.

பண்ணையாராக வரும் கல்கத்தா விஸ்வநாதன் அசல் பண்ணையாராகவே மாறிவிட்டார், காளையாக வரும் ராஜேஜின் நடிப்பில் துடிப்பிருக்கிறது. பக்கிரியாக வரும் ரவீந்தரின் பைத்தியக்கார நடிப்பு வெகு அருமையாக உள்ளது. அநேகமாக ரவீந்தருக்கு

### விமர்சனம்:

தன் திறமையை காட்ட சந்தர்ப்பம் கிடைத்த படம் இதுவாகத் தான் இருக்கும், அற்புதமாக செய்துள்ளார். எழுத்தாளராகவும், ஓவியராகவும் விஜய்மோகன் வருகிறார். கதைக்கு சம்பந்தமில்லாத பாத்திரமாக இருக்கிறது அவருடைய பாத்திரம், பூர்ணிமா ஜெயராம் வந்து போகிறார்.

பண்ணையாரின் உயிரைப் பறிக்கும் பாப்பாத்தி பாத்திரம் படத்திற்கு உயிரூட்டுவதாக இருக்கிறது. சுபத்திராவின் நடிப்பு திருப்தியாக உள்ளது. அனந்துவின் அர்த்தமுள்ள வசனங்களும் அனல் பொறிக்கும் வசனங்களும் அருமையாக உள்ளது.

பாடல்களில் ஒன்றிரண்டு கேட்கும்படி உள்ளது இளையராஜா இசை வழக்கம் போல் உள்ளது பண்ணையாரின் செயல்களை தெருக்கூத்தின் மூலம் கூறுவது நன்றாக இருக்கிறது. இன்னும் திறம்பட செய்திருக்கலாம். இரவில் நீல வட்டி வெளிச்சத்தை நல்ல முறையில் படமாக்கியிருப்பது சோமேந்துராயின் திறமையான ஒளிப்பதிவிற்கு சான்று. கதை. திரைக்கதை அமைத்து ஸ்ரீதர் ராஜன் இயக்கியுள்ளார். தனஞ்செயனின் நடனமும் நன்றாக உள்ளது மொத்தத்தில் பரவாயில்லை.

சிவகுமார்-சுலக்ஷணா
படம்: அம்மா இருக்கா

# கலைவிருந்து

# ஒரு கை பார்ப்போம்

-விமர்சனம்-

பணக்கார வீட்டுப் பெண் தன் வீட்டுக் கார் டிரைவரை மணந்து, அவனின் கொடுமைக்கு ஆட்பட்டு இறுதியில் கைபிடித்த கணவனே மனம் திருந்துவதால் மகிழ்ச்சி கொள்கிறாள் இது கதை. விசு, கார்த்திக் இருவருக்கும் ரவுடி கேரக்டர். இருவரும் தங்களது பாணியில் தங்களது பாத்திரத்தை சரிவரச் செய்துள்ளனர். தன்னால் எந்தப் பாத்திரத்திலும் சோபிக்க முடியும் என்பதை இப்படத்தில் விசு நிரூபித்துள்ளார், பதுமை போல் ராதா வந்து போகிறார் மனோரமா பைத்தியம் போல் நடித்து செய்யும் சேஷ்டைகள் ரசிக்கும்படியாக உள்ளது.

சிலுக்குவின் நடனம் ரசிகர்களுக்கு நல்ல விருந்து பாடல் காட்சிகளில் ஒளிப்பதிவு நன்றாக உள்ளது. செந்தாமரை ஸ்ரீலேகா வினு சக்ரவர்த்தி, ரத்னகுமார் ஆகியோரும் தங்கள் பாத்திரத்தை சரிவரச் செய்துள்ளனர்.

வாலியின் பாடல்களும், விஜயபாஸ்கரின் இசையும் படத்திற்கு பெரிய பிளஸ்பாயிண்டாக உள்ளது என்றால் மிகையாகாது.

எஸ். பி. முத்துராமனின் நகைச்சுவை வசனங்கள் அருமையாக உள்ளன. பார்ப்பவர்களுக்கு போரடிக்காதவாறு படத்தை எஸ். பி. முத்துராமன் இயக்கியுள்ளார். நல்ல நகைச்சுவைச் சித்திரம்.

மொத்தத்தில் ஒரு கை பார்ப்போம் ஒருமுறை பார்க்கலாம்,

பாலுமணி

# மலர் வீடு

கன்யா கிரியேஷன்ஸ் ''மெல்லப் பேசுங்கள்'' படத்துக்காக ஒரு லட்சம் ரூபாயில் பாடல் காட்சி ஒன்று படமாக்கப்பட்டது

பிரபுவும் உமாவும் காதலர்கள் அவசரப்பட்டு காதலித்துவிட்டு பின்னர் அவஸ்தைப்படாமல் இருக்க திட்டமிடும் அவர்கள் கல்யாணத்துக்கு பிறகு தங்கள் தேவை என்னென்ன என்று பட்டியல் போடுகிறார்கள் தேவைகளில் முதல் இடம் வகிப்பது வீடு என்ற முடிவுக்கும் வருகிறார்கள் தங்கள் லட்சியத்தை அடைகின்ற தீவிர ஆசையில் இரவு பகலாக உழைத்து வீடு கட்ட இடம் ஒன்றை வாங்குகிறான் பிரபு அன்று முதல் வீடு பற்றிய கனவு அவர்களை முழுமையாக ஆசரமித்துக் கொள்கிறது அவர்கள் கனவில் செவ்வந்தி மலரே சுவராக, தாமரை மலரே விளக்குகளாக அந்த வீடு எழில் ஓவியமாக உருவாகிறது

'செவ்வந்தி பூக்களால்
செய்த வீடு
வெண் பஞ்சு மேகம் நீ
கோலம் போடு
நெஞ்சில் நஞ்சம் —
ஒன்றாகிக்
கொஞ்சும் கொஞ்சம்''

என்றுபாடியபடி அந்தக் கனவு வீட்டை அவர்கள் சுற்றி வருகிறார்கள் இந்தக் காட்சிக்காக ஒரு லட்சம் ரூபாய் செலவில் நவீனமான வீடு ஒன்று பிரத்யேகமாக வி ஜி பி தங்கக் கடற்கரை அருகில் நிர்மாணிக்கப்பட்டிருந்தது

ஐயாயிரம் ரூபாய் பெறுமானமுள்ள மலர்கள் இக்காட்சியில் பயன்படுத்தப்பட்டுள்ளது

புதுமுகம் வசந்த்—பானுப்ரியா ஜோடியாக நடிக்க ஒய் ஜி மகேந்திரன் வினு சகரவர்த்தி, குண்டு கல்யாணம், குள்ளமணி, அனீப். அனுராதா ஆகியோர் நடிக்கும் இப்படத்தின் கதையை மது எழுத கலைமணி வசனம் எழுதுகிறார்,

வைரமுத்து, புலமைப்பித்தன், ஆகியோரின் பாடல்களுக்கு இளையராஜா இசையமைக்க எம் சி சேகர் ஒளிப்பதிவு செய்கிறார்

இப்படத்தின் டைரக்ஷன் பொறுப்பை பாரதிவாசு இரட்டையர்கள் ஏற்றுள்ளனர்

அனுராதா

# 'என் ஆசை உன்னோடுதான்'

இந்திரா பிரேம் லோட்டஸ் பிலிப்ஸ் சார்பில் 'என் ஆசை உன்னோடுதான்' என்னும் திரைச் சித்திரத்தை உருவாக்குகின்றனர். இதற்கான தொடக்க விழா ஏவி.எம்மில் நடந்தது.

பிரேம், பூர்ணிமா ஜெயராம், தேங்காய் சீனிவாசன், ஒய் ஜி மகேந்திரன், ரஜினி, ஒருவிரல் கிருஷ்ணாராவ் மற்றும் ஜெய்கணேஷ் ஆகியோர் நடிக்கின்றனர்,

இப்படத்தினை இயக்கும் பொறுப்பை கே. நாராயணன் ஏற்றுள்ளார்.

# காதலியே சித்தியான கதை

பிரக்ளாவில் தன் காதலியை சந்திக்கவூருக்குள் வேகமாக வந்து கொண்டிருந்தார் ரவீந்தர் புதிதாக வந்திருக்கும் தன் சித்தியிடம் தன் காதலியைப் பற்றி கூறி தனக்கு மணமுடிக்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்ற எண்ணத்தில் வண்டியை வேகமாக ஓட்டினான்.

சித்தப்பாவும் சித்தியும் வாசலில் நின்று ரவீந்தரை வரவேற்றனர். சித்தியைப் பார்த்ததும் ரவீந்தர் கதறினார் காரணம்? சித்தி வேறு யாருமில்லை. அவனுடைய காதலி பஞ்சவர்ணம் தான் அது.

சித்தப்பாவாக சங்கிலி முருகனும், சித்தியாக அருந்ததியும் நடிக்க இக்காட்சி, 'என் ப்ரியமே' படத்திற்காக படமாக்கப்பட்டது

கபில்தேவ் மேகலா
படம்: வளர்பிறை கனவுகள்

சுவப்னா
படம்: அவள் தமிழச்சி

# பொய்க்கால் குதிரை: பாடல் பதிவு

கே. பாலச்சந்தரின் கலைவாணி நிறுவனத்தின் 'பொய்க்கால் குதிரை' படத்திற்கு எம்.எஸ். விஸ்வநாதனின் இசையில் வாலி எழுதிய,

''நான் ஒரே ஒரு
தம்மடிச்சேன்
ஒரு விவரம் தெரியல்லே''

என்ற இப்பாடலை மலேசியா வாசுதேவன் விஜயரமணி பாட பதிவு செய்யப்பட்டது

கிரேசி மோகன் வசனம் எழுதும் இதன் டைரக்ஷனை கே. பாலச்சந்தர் கவனிக்க பொய்க்கால் குதிரை வேகமாக வளர்ந்து வருகிறது.

எஸ் வி சேகர்-விஜி
படம்: இன்று முதல் நீ எனக்கு

## உக்கம்சந்த் கோரிக்கை:

# விவசாயிகளுக்கு தேசிய வங்கிகள் கடன் தர வேண்டும்

சென்னை, மார்ச். 13. விவசாயிகளுக்கு தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள் கடன் உதவி அளிக்க மத்திய அரசு வழிவகை செய்ய வேண்டும் என்று உக்கம்சந்த் எம்.எல் ஏ. கோரிக்கை விடுத்தார்.

சட்டசபையில் நிதி நிலை அறிக்கை மீதான விவாதத்தில் கலந்து கொண்டு கழக உறுப்பினர் மதுராந்தகம் எஸ் டி உக்கம் சந்த் பேசுகையில் கூறியதாவது:—

மக்களுடையநலத்திலே அக்கறை கொண்டு அத்யாவசியத் தேவைகளை நல்ல முறையிலே பூர்த்தி செய்கிற அரசாக முதல்வர் புரட்சித் தலைவர் அரசு இருக் அப்படி ஒரு தொலை நோக்குப் பார்வையோடு சத்துணவுத் திட்டத்தை தீட்டி செயலாக்கி வருகிறது என்றால் அது மிகையாகாது.

கணித மேதையாக விளங்கிய 'ஜியோமிதி' கணிதத்தில் 'ஜியாமின்டரி' முறையை அறிமுகம் செய்தபோது அதை ஏற்றுக்கொள்ள முடியாது எனப் பேராசிரியர்களும் மற்றவர்களும் எதிர்த்தார்கள்.

ஆனால் அவர் மனம் தளராமல் ஏழை மாணவர்களை அழைத்து தன்னுடைய பணத்தைச் செலவிட்டு 5 ஆண்டுக் காலம் அந்த பாடத்தைச் சொல்லிக் கொடுத்தார். தன்னுடைய சொத்தை இழந்து வறிய நிலைக்குள்ளானார்

அதன் பிறகு சுற்றுப் புறத்திலுள்ள மக்கள் ஒன்று சேர்ந்து அவரைப் பார்த்து அந்த கணித முறையை கற்றுத்தாருங்கள் செலவு எவ்வளவாக இருந்தாலும் தருகிறோம் என்றார்கள். அவருடைய உழைப்பின் மூலம் அந்த கணித முறை உலகம் முழுதும் ஏற்றுக்கொள்ளப்பட்டு இன்று விஞ்ஞான முன்னேற்றம் ஏறபட்டிருக்கிறது.

### மிகப் பெரிய மாற்றம்

அதைப் போல சத்துணவுத் திட்டத்தை எடுத்துக கொண்டால் அது கல்வியிலே மிகப் பெரிய மாற்றத்தை கொண்டுவந்திருக்கிறது. அதன் மூலம் இரண்டரை லட்சம் குழந்தைகள் கூடுதலாக பள்ளிகளில் படிக்கிறார்கள். ஏழை எளிய மாணவர்கள் கல்வி கற்க வந்திருக்கிறார்கள்.

வறட்சி நிவாரணத்திற்கு மத்திய அரசிடம் 190 கோடி ரூபாயை தமிழக அரசுகேட்டிருக்கிறது. அந்த பணம் வரும் வரை காத்திராமல் 45 கோடி ரூபாயை செலவு செய்து கொண்டிருப்பதற்காக அரசுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

1974ம் ஆண்டு வறட்சி ஏற்பட்டபோது அன்றைக்கு வறட்சிநிவாரணப் பணி எப்படி நடந்தது என்பதை சொல்ல வேண்டியதில்லை. இன்றைக்கு நல்ல முறையில் நடந்து கொண்டிருக்கிறது.

அன்றைக்கு படி அரிசி 10 ரூபாய் விற்றதை நாம் சந்தித்திருக்கிறோம். அந்த சூழ் நிலை இன்றைக்கு வரக்கூடாது என்பதற்காகத்தான் முதல்வர் புரட்சித தலைவர், தமிழகத்திலே உள்ள குடும்பங்கள் வாடிவிடக் கூடாது என்பதற்காக அரிசி கேட்டு சென்ற மாதம் உண்ணாவிரதம் இருந்தார்.

அந்த உண்ணாவிரதத்தின்போது கூட திருச்செந்தூர் தேர்தலைப் பற்றி கவலை இல்லை திருச்செந்தூர் தேர்தலை விட தமிழக நாட்டு மக்களுக்கு அரிசி வேண்டும் என்பதற்காக டெல்லிக்குத்தான் செல்வேன் என்று ஆணித்தரமாக சொன்னார்.

டெல்லிக்குச் சென்று மத்திய அரசு உறுமொழி கொடுத்த பிறகு தான் திருச்செந்தூருக்கு தேர்தல் பிரச்சாரத்திற்கு சென்றார் என்பதை [illegible] உண்ணா [illegible] மதுராந்தகம் பகுதி

யிலே விவசாயத்தைநம்பி தான் மக்கள் வாழ்கிறார்கள். மதுராந்தகம் பெரிய ஏரியை வறட்சி நிவாரணப் பணியின் கீழ் தூர் எடுத்து ஆழப்படுத்த வேண்டும்.

துணி, மருந்து பொருட்களுக்கு நுழைவு வரி மேபாடப்பட்டிருப்பதால் நல்லமுறையில் நடந்து வரும் வியாபாரம் பாதிக்கப்பட்டு விடும். இங்கே நுழைவு வரி இருப்பதால் பல்வேறு மாநிலங்களில் அந்த வியாபாரத்தை ஆரம்பித்து விட்டால் இந்த துறையில் உள்ள பல்லாயிரக்கணக்கானவர்கள் வேலை இழக்கும் நிலை ஏற்படும்.

நுழைவுவரிக்கு பதிலாக நிதியை பெறும் வகையில் வேறு வழியைக் கையாளலாம். லைசென்ஸ் கட்டணத்தை அதிகப்படுத்தி அதன் மூலமாக நிதி பெருக்கத்திற்கு வழி வகைகளை செய்ய வேண்டும்.

விவசாயிகளுக்கு தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள் மூலமாக கடன் வழங்குவதற்கு மத்திய அரசு வழிவகைச் செய்ய வேண்டும். மதுராந்தகம் பகுதியில் ஆரம்பிக்கப்படவுள்ள காகித ஆலை விரைவில் துவக்கப்பட வேண்டும.

இவ்வாறு உக்கம்சந்த் கூறினார்.

## கொத்தடிமை விடுதலை...

(1-ம் பக்கத் தொடர்ச்சி

அனைத்துத் தமிழர்களையும் மீட்டுவர தமிழகக் காவல்துறைக்கு உத்தரவிட்டார்.

தமிழகப் போலீசார் ஹைதராபாத்திற்குச் சென்றனர். ஒவ்வொரு மலைப்பகுதிக்கும் சென்று கொத்தடிமைகளாக இருந்த தமிழர்களை மீட்டனர்.

இப்படி மீட்கப்பட்ட 397 பேர்களும் சென்னைக்கு அழைத்து வரப்பட்டனர். டஸ்கள், ரெயில் மூலம் அவர்கள் தங்கள் சொந்த ஊர்களுக்கு அனுப்பப்பட்டனர்.

அவர்களுக்கு உதவும் படி மாவட்டக் கலெக்டர்களுக்கும், மாவட்டப் போலீஸ் அதிகாரிகளுக்கும் உத்தரவிடப்பட்டிருக்கிறது.

### கடும் நடவடிக்கை

இவர்களை ஏமாற்றி அழைத்துச் சென்று கொத்தடிமைகளாக்கிய 'ஏஜெண்டுகள்' குவாரிச் சொந்தக்காரர்கள் மீது கடும் நடவடிக்கை எடுக்கும் படியும் உத்தரவிடப் பட்டிருக்கின்றது.

மீட்கப்பட்ட 397 பேர்களும் பத்து மாவட்டங்களைச் சேர்ந்தவர்கள் பெரும்பாலோர் சேலம் மாவட்டத்தைச் சேர்ந்தவர்கள். இவர்களில் பலர் சிறுவர்களாகும்,

(8-ம் பத்தித் தொடர்ச்சி)

அதிக வறட்சியால் பாதிக்கப்பட்டிருக்கிறது உண்மை என்று கூறி மத்திய அரசிடமிருந்து அதிகமான தொகையை பெற்றுத்தர முன்வந்திருக்க வேண்டுமே யொழிய அப்படி செய்யாமல் வேறு ஒன்று கூறியிருக்கிறார். இங்கே வறட்சிப் பணிகள் எப்படி செய்யப்படுகின்றன என்றால் நாமினேஷனிலேதான் கொடுக்கப்படுகிறது, அப்படியிருக்கக் கூடாது. ஏலத்தில் விடவேண்டுமென்ற முறையை அங்கே சொல்லியிருக்கிறார் என்றால் பணி நடக்க வேண்டுமென்ற எண்ணம் இருப்பதைவிட காண்ட்ராக்ட் ஒப்பந்தக்காரர்களுக்குப் போய்ச் சேர வேண்டுமென்ற எண்ணம் தான் அவர்களிடத்திலே மேலோங்கி இருக்கிறது.

இவ்வாறு சண்முகம் கூறினார்.

## திருத்தணி சண்முகம் பேச்சு:

# முதல்வரின் பேச்சை திரித்து கூறுவதா?

சென்னை, மார்ச் 13 - விலைகளை ஏற்றிக் கொள்ளுங்கள் என முதல்வர் பேசியதுபோல கருத்தை வெளியிட்ட கம்யூனிஸ்டு உறுப்பினருக்கு கழக உறுப்பினர் திருத்தணி சண்முகம் விளக்கம் அளித்தார்.

சட்டசபையில் நிதி நிலை அறிக்கை மீதான விவாதத்தில் கலந்து கொண்டு கழக உறுப்பினர் திருத்தணி சண்முகம் பேசுகையில் கூறிதாவது:—

ஏதோ ஓட்டல்முதலாளிகள் எல்லாம் ஒன்று திரண்டு ஒரு மாநாடு நடத்தி அந்த மாநாட்டிலே புரட்சித் தலைவரை அழைத்து அவரிடம் சத்துணவுத் திட்டத்திற்குப் பணம் கொடுத்தார்கள். அதனால் அவர்களை வெகுவாகப் பாராட்டி ஓட்டல்களில் விற்கின்ற பொருள்களின் விலைகளையெல்லாம் நீங்கள் எவ்வளவு கூட்டி விற்றாலும் பரவாயில்லை என்று அனுமதி வழங்குகின்ற தோரணையில் நடந்துகொண்டதாக உறுப்பினர்கள் இந்த அவையிலே பேசினார்கள்.

ஆனால்புரட்சிதலைவர் வறுமைக் கோட்டிற்குக் கீழாக இருக்கிற மக்களுக்குப் பாதுகாப்பு அளிக்கிற வகையில், நீங்கள் எனக்குச் செய்கிற நல்ல காரியங்கள் என்ன வென்றால், நீங்கள் விற்கிற பொருள்களின் விலைகள் ஒரு கட்டுக் கடங்கியதாக, சாதாரண பாமர மக்கள் வறுமைக் கோட்டிற்குக் கீழாக இருக்கிற மக்கள் வாங்குகின்ற அளவுக்கு நீங்கள் விலைகளைக் குறைத்துத் தாருங்கள் என்று அந்த நேரத்திலே பேசியிருக்கிறார்.

### விதவைகள் மேம்பாடு

அது மட்டுமல்லாமல் கிராமப்புறங்களில் நியாயவிலைக்கடைகள் அதிகமாகத் திறந்து, தனியார்கள் தாங்கள் விற்கின்ற பொருள்களின் விலையை அதிகமாகக் கூட்டி விற்று, கொள்ளை அடிக்கின்ற நிலையில், பொருள்கள் நியாயமான விலைக்குக் கிடைக்கின்ற அளவுக்குச் செய்ய, கூட்டுறவு நியாயவிலைக் கடைகளைக் கிராமப் பகுதிகளிலே தோற்றுவித்தார்கள், அதைப் போலவே, தமிழக அரசு இந்த ஓட்டல் பண்டங்களின் விலையைச்சரியான நியாயமான விலையில் விற்பதற்காக, விதவைத் தாய்மார்களுக்கு அரசு மூலமாகக் கடன் உதவி செய்து, அங்கே தோசை இட்டிலி போன்ற வகைகளை வெகுக்குறைவான விலையில் விற்பார்களானால், அதைப்பயன்படுத்தி, ஓட்டல்வியாபாரிகள் அதற்குத் தகுந்தாற் போல, தாங்கள் விற்கும் பொருள்களின் விலையை நிர்ணயிப்பற்கு ஏதுவாக இருக்கும். இந்த வகையிலே, தமிழகத்திலே நாங்கள் இப்படி ஒரு திட்டத்தை அறிமுகப்படுத்த இருக்கிறோம் என்பதை அந்த மாநாட்டின் வாயிலாக, புரட்சித்தலைவர் தன்னுடைய கருத்தையும் எண்ணத்தையும் வெளியிட்டிருக்கிறார் என்பதை இங்கே நான் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன்.

### அவர் என்ன செய்திருக்க வேண்டும்

வறட்சிப் பகுதியைப் பார்வையிடுவதற்கு வந்திருந்தமத்திய குழுவோடு இந்திரா காங்கிரஸ் கட்சியினுடைய பொறுப்பு வாய்ந்த தலைவர் ஒருவர் சென்றார் என்றுசெய்தித்தாள்களில் செய்தி வந்தது. ஆனால் அந்தக் குழுவிடத்திலே உண்மையிலே அவர் சொல்லியிருக்க வேண்டியது தமிழகம் கேட்டிருக்கிற முழுத் தொகையையும் அளிக்க பரிந்துரைத்திருக்க வேண்டும். உண்மையிலே தமிழகம்

(3-ம் பத்தி பார்க்க)

# சைக்கிள் பேரணி...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

சேகர் ஏதோ டெல்லி சென்றதாகவும் அங்கே பிரதமரையும் மத்திய அமைச்சர்களையும் சந்தித்து இதனைப் பெற்றதாகவும் இவர்கள் கேட்டதால் இரக்கப்பட்டு கொடுப்பதாகவும் தொலைக்காட்சியில் செய்தி வருகிறது.

### மாற்றாந்தாய் மனப்பான்மை

மக்கள் மத்தியில் ஒரு தவறான எண்ணத்தைப் பரப்பப் பார்க்கிறார்கள். இந்த அரசு கையாலாகாத அரசு போலவும் இவர்கள் முயற்சித்து பெறுவதாகவும் தொலைக்காட்சியில் விளம்பரம் செய்கிறார்கள், அதை தமிழகத்தில் உள்ள சில பத்திரிகைகளும் வெளியிடுகின்றன.

இங்குள்ள சில அரசியல் கட்சிகள் வறட்சியை தங்கள் கட்சிகளின் வளர்ச்சிக்காக எடுத்துக கொண்டுள்ளன, இதை முறியடித்தாக வேண்டும்.

தமிழகத்தை எல்லா வகையிலும் புறக்கணிக்கிறார்கள, மாற்றாந்தாய் மனப்பான்மையோடு மத்திய அரசு நடந்து கொள்கிறன.

இந்த உண்மை நிலையை மக்களுக்கு எடுத்துச் சொல்ல மாபெரும ஊர்வலத்தை நடத்தியுள்ளனர்.

இவ்வாறு அனகாபுத்தூர் ராமலிங்கம் எம். எல். சி. பேசினார்.

### மதுசூதனன்

பேரணியில் கலந்து கொண்டவர்களுக்கு நன்றி தெரிவித்து இ. மதுசூதனன் பேசினார்.

பேரணிக்கு வந்த அனைவரையும் சைதை துரைசாமி வரவேற்றுப் பேசினார். பின்னர் ஊர்வலமாக வந்தவர்கள் அமைதியாக கலைந்து சென்றனர்.

111-வது வட்டத்தில்

# இன்று மாலை கழக பொதுக்கூட்டம்

சென்னை, மார்ச் 13— சென்னை 111வது வட்டத்தில் இன்று (13ந் தேதி) மாலை கழகப் பொதுக்கூட்டம் நடக்கிறது.

ஏ. பி. வரதராசன் தலைமையிலும், தாமோதரன் முன்னிலையிலும் சிங்காரவேலர் திடலில் நடக்கும் இக் கூட்டத்தில் திருவை அண்ணாமலை, வளர்மதி சா. கோவிந்தசாமி, சச்சிதானந்தம், தாளமுத்து, தட்சணாமூர்த்தி. மதிவாணன், சுந்தரம், கோலாஸ், முருகேசன், சண்முகம், தேவராஜ், நடராஜன், முனுசாமி, கலியமூர்த்தி, கான், குட்டி, சண்முகம், பிரேமா, துரை, அலியார், தாஸ், காளி, ஏ. நடராசன், ஜீவா, ஏசு ஆகியோர் பேசுகிறார்கள்.

## காடுவெட்டி கண்ணப்பன் பேச்சு:

# எதற்கெடுத்தாலும் குறை கூறும் எதிர்க்கட்சிகள்

சென்னை, மார்ச் 13. எதற்கெடுத்தாலும் குறைகளையே தேடிப் பிடித்துக் கொண்டிருக்காமல் அரசின்நல்ல திட்டங்களுக்கு எதிர்கட்சி உறுப்பினர்கள் ஒத்துழைப்புத் தரவேண்டும் என்று கழக உறுப்பினர் காடுவெட்டி கண்ணப்பன் சட்ட மேலவையில் வேண்டுகோள் விடுத்தார்.

சட்டமேலவையில் நிதி நிலை அறிக்கை மீதான விவாதத்தின்போது காடுவெட்டி கண்ணப்பன் பேசியதாவது:—

தமிழகத்தில் இயற்கை பொழித்து மழையில்லாமல் வறட்சி நிலை ஏற்பட்டுள்ளது நீர் நிலைகளில் தண்ணீர் குறைந்ததால் மின்சார கட்டுப்பாடும் ஏற்பட்டு விட்டது.

### நிவாரண வேலைகள்

இந்த நிலையில் நிவாரண வேலைகளை இந்த அரசு சிறப்பாக செய்து கொண்டிருக்கிறது. அரிசிக்கும், மண்ணெணய்க்கும் மக்கள் 'க்யூவில்' நிற்கிறார்கள் என்றெல்லாம் சிலர் பேசினார்கள். அப்படி நின்றாலும் அவர்களுக்கு பொருள் கிடைக்கிறது [illegible] முறையில் பொருளை [illegible] அரசு விநியோகம் செய்கிறது. மக்களின் தேவைகளை [illegible] அரசு [illegible] அடிப்படையில் வேலை தர முடியுமா என்று கேட்டார்கள். அந்த திட்டத்தையும் அரசு செம்மையாக செய்துகொண்டிருக்கிறது. ரூ. 550லிருந்து ஆயிரத்து 50ஆக உறுப்பினர்களின் சம்பளம் உயர்ந்திருக்கிறது.

அந்த சம்பளத்தில் 300 ரூபாயை உறுப்பினர்கள் குறைத்துக் கொண்டால் ஒவ்வொரு உறுப்பினருக்கும் ஒரு குமாஸ்தாவை நியமனம் செய்து மேலும் பலருக்கு அரசு வேலை வாய்ப்புக் கொடுக்கும்.

### ஒத்துழைப்பு தாருங்கள்

எதற்கெடுத்தாலும் குற்றம், குறைகளையே தேடிப்பிடித்து கொண்டிராமல் அரசின் நல்ல பல திட்டங்களை வரவேற்று ஒத்துழைப்புத் தாருங்கள் என்று கேட்டுக் கொள்கிறேன்.

வறட்சி நிலைமையில் ஏழை எளிய மக்கள் எவ்வளவு கஷ்டப்படுகிறார்கள் என்பதை [illegible] அரசு ஊழியர்களும் ஆசிரியர்களும் எண்ணிப்பார்க்க வேண்டும்.

### இரண்டு மடங்கு

மத்திய அரசை விட புரட்சித்தலைவர் ஆட்சியில் மின் உற்பத்தி இரண்டுமடங்காக பெருகியிருக்கிறது. 7 ஆண்டுகளில் தி.மு.க. அரசு மின் உற்பத்திக்காக 112கோடி ரூபாய் செலவுசெய்தது. ஆனால் கடந்த 4 ஆண்டுகளில் கழக அரசு 382 கோடி ரூபாய் செலவு செய்துள்ளது. இப்போதும் பட்ஜெட்டில் 30 சதவிகிதம் மின்சாரத்துக்காக ஒதுக்கப்பட்டுள்ளது.

அடுத்த தேர்தலைப் பார்ப்பவன் அரசியல்வாதி—அடுத்த தலைமுறையைப் பார்ப்பவன் ஞானி என்பார்கள். அடுத்த தலைமுறையின் முன்னேற்றத்தில் அக்கறை கொண்டு இன்று புரட்சித்தலைவர் செயல்பட்டு வருகிறார்,

இவ்வாறு காடுவெட்டி கண்ணப்பன் பேசினார்.

தலைமைக்கழக அறிக்கை எண்:12-83

# சென்னை மாவட்ட கழக தோழர்களுக்கு...

கழக விதிமுறைகளுக்கு மாறாக நடந்து, கழகத்தின் நற்பெயருக்குக் களங்கம் விளைவிக்கும் முறையில் செயல்பட்ட காரணத்தினால்

கு க. செல்வம்
(சென்னை மாவட்ட கழக துணை செயலாளர்)

ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி
(சென்னை மாவட்ட கழக துணை செயலாளர்)

தி நகர் மூர்த்தி
(தியாகராய நகர் பகுதி கழகச் செயலாளர்)

ஆகியோர் இன்று முதல் கழகத்தின் சாதாரண உறுப்பினர் பொறுப்பு உட்பட அனைத்துப் பொறுப்புக்களிலிருந்தும் நீக்கிவைக்கப்படுகிறார்கள்.

கழக, சார்பு மன்றத் தோழர்கள் யாரும் அவர்களுடன் எந்தத் தொடர்பும் வைத்துக் கொள்ள வேண்டாம் என்று கேட்டுக்கொள்ளப் படுகிறார்கள்.

மாண்புமிகு புரட்சித்தலைவர் அவர்களின் ஒப்புதலுடனும், பொதுச்செயலாளர் திருமிகு ப. உ. ச. அவர்களின் அனுமதியுடனும் இவ் அறிவிப்பு வெளியிடப்படுகிறது.

என். ராசாங்கம்
அமைப்புச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்

சென்னை—14
13-3-83